
லாரி பேக்கர்
SHWETA
SALUNKHE
ஸ்வேதா சாலுங்கே
நாகேஷ் மோனே
தமிழில் கிருஷ்ணன்

# லாரி பேக்கர்





डेक्कन एज्युकेशन सोसायटीचे

न्यू इंग्लिश स्कूल, टिळक रोड, पुणे ३०.




'अहम भारत' उपक्रमांतर्गत पुस्तिका ®

Cadence Design Systems, Inc.

cadence®

# லாரி பேக்கர்



“நான் ஒரு போதும் சமூகத்தில் பணமும் அந்தஸ்தும் உள்ளவர்களுக்கு மட்டுமே வீடுகள் கட்டி கொடுப்பதில்லை. ஒரு மாத்தியூ, பாஸ்கரன், முனீர் அல்லது சங்கரனுக்கோ தேவையான வீடுகளையே நான் கட்டுகிறேன்.” - லாரி பேக்கர்

# லாரி பேக்கர்






“இந்தியா சிறந்த கட்டிடக் கலை மரபு கொண்ட நாடு. மிக சிறந்த கட்டிடங்களை உருவாக்கிய நாடு. இது போன்ற பன்முகத்தன்மை கொண்ட கட்டிடக்கலைகள் உள்ள நாடு உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் இல்லை என்றே சொல்லலாம். இந்தியாவின் கட்டடக்கலை மரபு அழிந்து விடாமல் பாதுகாக்க வேண்டிய கடமை நமக்கு உள்ளது. இந்த மரபு தொடர்ந்து கை மாற்றி கொடுக்கும் அவசியம் நமக்கு உள்ளது.”

Laurie Baker




# லாரி பேக்கர்

லாரன்ஸ் வில்பிரட் பேக்கர் 2ஆம் தேதி மார்ச் மாதம் 1917 ல் இங்கிலாந்தில் பிறந்தார். உலகிற்கு லாரி பேக்கர் என்று அறியப்படுவார். அவரது குடும்பம் மரபு வழக்கங்களை பின்பற்றுவர்களாக இருந்தார்கள். பேக்கர் அவரது சிறு வயது முதலே கட்டிடக் கலை மீது ஆர்வம் கொண்டிருந்தார்.

தன்னுடைய 17அம் வயதில் ஐரோப்பா கண்டம் முழுவதும் சைக்கிளில் சுற்றி வந்தார்.

தன்னுடைய பயணத்தின் போது பல அழகான நகரங்களையும் நிலப்பரப்புகளையும் காண நேர்ந்தது. ஒவ்வொரு ஊரிலும் பல வித்தியாசமான கட்டிடங்களை கண்டது அவருடைய இளம் மனதில் ஆழமான அனுபவமாக பதிந்தது. அவருடைய பயண முடிவில் கட்டிட கலையை படிக்கவும் அதில் தொடர்ந்து வேலை செய்யவும் முடிவு செய்தார்.

## கல்வி

பேக்கர் தன் பள்ளி படிப்பை முடித்த பின் லண்டனில் உள்ள பர்மிங்காம் கட்டிடக்கலை கல்லூரியில் படிப்பைத் தொடர்ந்தார். 1938ல் ராயல் கட்டிடக்கலை இன்ஸ்டிடியூட்டில் அசோசியேட் ஆக வேலையில் சேர்ந்தார். இரண்டாம் உலக போர் தொடங்கியதால் தன்னுடைய வேலையை தொடர்ந்து செய்யமுடியாமல் போனது.

## நண்பர்கள் ஆம்புலன்ஸ்

இரண்டாம் உலக போரின் போது லாரி அவரது நண்பர்களும் "நண்பர்கள் ஆம்புலன்ஸ்" எனும் தொண்டு நிறுவனத்தில் ஆம்புலன்ஸ் ஓட்டும் பணியாற்றினார். அங்கு அவர்களுக்கு அடிபட்ட போர் வீரர்களுக்கு அனஸ்தீசியா கொடுப்பது , சிறு அறுவை சிகிச்சை செய்வது , ஊசி போடுதல் போன்ற மருத்துவ பயிற்சிகள் அளிக்கப்பட்டது .



# சீனா ஜப்பான் போர்

சீனாவுக்கும்ஜப்பானுக்கும்போர் நடந்த சமயத்திலும் சீன அரசு போரில் காயமடைந்த வீரர்களின் மருத்துவ சேவைக்காக நண்பர்கள் ஆம்புலன்ஸ் சேவையை நாடியது. இந்த குழுவில் மருத்துவ சேவை தன்னார்வலராக லாரி பேக்கரும் சேர்ந்து கொண்டார்.






# அண்ணல் காந்தியின் தாக்கம்

சிறிது காலம் பேக்கர் பர்மா மியான்மரில் போரில் காயம் அடைந்த வீரர்களுக்காக மருத்துவ சேவை செய்து வந்தார். தொழு நோயினால் பாதிக்க பட்டவர்களுக்கு சேவை செய்து வந்தார். இச்சமயத்தில் உடல் நலக் குறைவினால் இங்கிலாந்து திரும்பச் சென்றார். அவர் போகும் வழியில் பம்பாயில் 3 மாதம் தங்க வேண்டியிருந்தது. அந்த சமயத்தில் அவர் அண்ணல் காந்தியை சந்திக்க நேர்ந்தது. காந்தியின் அஹிம்சா வழி போராட்டமும், அவரின் மானுடத்தின் மீதுள்ள அளவில்லா அன்பும் பேக்கரை மிகவும் பாதித்தது. காந்தி பேக்கரை இந்தியாவுக்கு வருமாறு வேண்டி கொண்டார். அவரை போன்ற கட்டிடக்கலை நிபுணர் இந்திய நாட்டுக்கு அவசியம் என்று கூறினார். ஏனெனில் இங்கு தான் பல கோடி மக்களுக்கு குறைந்த விலை வீடுகள் கட்ட வேண்டிய அவசியம் உள்ளது என்றும் பேக்கரிடம் கூறினார். அதுவும் அந்தந்த இடங்களில் கிடைக்கும் மூலப் பொருட்களை கொண்டே கட்டவும் வேண்டும் என்றும் கூறினார்.

## லாரி பேக்கரின் திருமணம்

1945ல் லாரி பேக்கர் இந்தியாவிற்கு திரும்பினார், தொழு நோய் சிகிச்சைக்கான மறுத்துவமனைகளை வடிவமைத்து தந்தார். தனது நண்பர் டாக்டர் சண்டியுடன் தங்கி இருக்கும் போது டாக்டர் எலிசபெத் ஜேக்கப் பை சந்திக்கிறார். இவர் டாக்டர் சண்டியின் சகோதிரி, அவர் வேலூர் மருத்துவக் கல்லூரியில் மருத்துவ தேர்ச்சி பெற்றவர்.

பேக்கரும் எலிசபெத்தும் சேர்ந்து ஒரு சிறிய கிளினிக்க்கை மாற்றியமைத்து மருத்துவமனையாக்கினர். எலிசபெத் தொழுநோயாளிகளுக்கு சிகிச்சை அளித்து வந்தார். லாரி, எலிசபெத் இருவரின் லட்சியமும் ஒன்றாகவே இருந்தது.

ஒரு நாள் இருவரும் பேசி கொண்டிருக்கும் பொது, லாரி எலிசபெத்திடம் தன்னை மணந்து கொள்ளும்படியாக கேட்டார். லாரியின் உயர்ந்த எண்ணங்களையும், நற்குணத்தையும் நன்கு அறிந்த எலிசபெத் உடனே சரி என்று கூறிவிட்டார். 1948ல் இருவருக்கும் திருமணம் இனிதே நடந்தது.



# இமாலயத்தில் பதினாறு வருடம்

திருமணம் முடிந்த உடனேயே லாரி பேக்கர் எலிசபெத் தம்பதிகள் இமாலயத்தில் உள்ள சண்டாக் எனும் ஊரிற்கு குடி பெயர்ந்தனர். சுற்றியுள்ள கிராமங்களில் உள்ள மக்களுக்கு ஒரு தேர்ச்சி பெற்ற  மருத்துவர் ஒருவர் வந்திருக்கிறார் என்று தெரிந்தவுடன் வெவ்வேறு இடங்களில் இருந்து மக்கள் வரத் தொடங்கினர். ஒரு ஆளில்லாத தேனீர் கடையிலேயே முதல் மருத்துவமனை நடந்தது. பின்னர் சேரா எனும் கிராமத்திற்கு குடி பெயர்ந்தனர். அங்கு ஒரு வீடையும், சிறிய மருத்துவமனையும் உருவாக்கினர். சில நேரங்களில் மக்கள் கேட்பதுமுண்டு, நீங்கள்  ஒரு கட்டிடக்கலை நிபுணர், உங்களுக்கு மருத்துவமனையில் என்ன வேலை என்று? பேக்கர் சிரித்து கொண்டே கூறுவார் ' என் மனைவி மட்டுமே இந்த மருத்துவமனையில் டாக்டர், மீதி வேலையாட்கள் எல்லாமே நான் தான் என்று. லாரி பேக்கர் உத்தர் பிரதேசத்தில் உள்ள பரிசாபாத் எனும் இடத்திலும் ஒரு தொழுநோய் மருத்துவமனை கட்ட உதவினார்.



## மரபு கட்டிடக்கலை நுட்பங்கள்

இந்தியா முழுவதும் பயணித்த பிறகே தனது பிரிட்டிஷ் கட்டிடக்கலை படிப்பு பெரிதும் இந்தியாவில் உதவ போவதில்லை என்று அவருக்கு தெரிய வந்தது. இந்தியாவின் மரபு கட்டிட கலைகளை உன்னிப்பாக கவனிக்க ஆரம்பித்தார். அதிகம் செலவில்லாத மூலப் பொருட்கள் மூலம் எவ்வாறு கட்டுவது என்று சாதாரண மக்களிடமிருந்து கற்று கொண்டார். அவரும் மிக எளிமையான வாழ்க்கையையே வாழ்ந்து வந்தார்.

லாரி பேக்கர் பல பள்ளிகள், மருத்துவமனைகள், மற்றும் சமூக சேவை நிறுவனங்களின் கட்டிடங்களை கட்டினார்.






# கேரளா

1963ல் லாரி பேக்கர் அவரது குடும்பத்துடன் வாக்மான் எனும் பழங்குடி வாழ் கிராமம் ஒன்றிற்கு குடி பெயர்ந்தனர். பேக்கர் சில தொழுநோய் மருத்துவமனைகள் அங்கு கட்டினார். சிறிது காலம் கழித்து திருவனந்தபுரத்திற்க்கு  பேக்கர் குடும்பத்துடன் சென்றிருந்தார். அங்கும் தொழுநோய் சிகிச்சை செய்வதேயே தொடர்ந்தனர். பின்னர் திருவானந்தபுரத்திலேயே நிரந்தமாக குடி பெயர்ந்தனர்.

# பேக்கரின் வீடு

திருவனந்தபுரம் வந்த பின் அரை ஏக்கர் ஒன்றை வாங்கி பேக்கர் வீடு கட்டினார். அது ஒரு அழகான சிறிய மலையின் மேல் கட்டப்பட்டது.  பேக்கர்ரின் வீடு ஒரு கட்டிடக்கலை அருங்ககாட்சியகம் போலவே உருவாகியது.

வீட்டின் கூரை, செங்கற் சுவர்கள், கதவுகள், ஜன்னல்கள், அனைத்துமே பழைய இடித்துத்தள்ளப்பட்ட பழங் கட்டிடங்களில் இருந்து எ டுக்கப்பட்டது. இதனால் பேக்கரின் வீடு கேரளாவில் இருந்த கட்டிடக்கலை பாணியை  எடுத்துகாட்டுவது போன்ற ஒரு தோற்றம் அளித்தது.



# பேக்கர் கட்டிடங்கள்

40 வருடகாலத்தில் பேக்கர் பல விதமான கட்டிடங்களை கட்டினார். திருவானந்தபுத்திற்கு குடிபெயர்ந்த பின் பல குறைந்த-விலை கட்டிடங்களை கட்டினார். இதில் பெரும்பாலும் மிக சாதாரண மக்களுக்கே கட்டி கொடுத்தார். மேலும் தேவாலயங்கள், கல்வி கூடங்கள், சமூக கூடங்கள் போன்றவையும் கட்டி கொடுத்தார். இக்கட்டிடங்கள் எல்லாவற்றிலும் பொதுதன்மை ஒன்று உண்டு என்றால் அது இவை எல்லாமுமே மரபு சார்ந்த தொழில்னுட்ப்பமும், பொருட்களையுமே வைத்து காட்டியதாகும். பேக்கரின் எல்லா கட்டிடங்களிலும் இதை காணலாம்.









## லாரி பேக்கரின் இந்திய அனுபவம்

மக்களுக்கு தேவையான எல்லா கட்டிடக்கலை அறிவும் மரபு கட்டிடக்கலையில் உள்ளது. இந்தியாவில் எங்கு வேணுமென்றாலும் செல்லுங்கள்  மக்கள் அவரவர் வீடுகளை தம் முயற்ச்சியிலேயே கட்டி கொண்டார்கள். ஆனால் பாருங்கள் கால மாற்றத்தில் அந்த அறிவு பொக்கிஷத்தை மெல்ல மெல்ல இழந்தனர். அதனால் தான் இப்போது அவர்களுக்கு அடுத்தவரின் உதவி தேவைப்படுகிறது

லட்சக்கணக்கான மக்களின் இருப்பிடத்திற்கான தேவையை நாட்டின் தலைவர்களில் காந்தி மட்டுமே உணர்ந்திருந்தார். காந்தி கூறியதில் எனக்கு மிகவும் பிடித்தமானது "வீடுகட்டுவதற்கான மூலப் பொருட்கள் நாம்வாழும் சுற்றி உள்ள இடத்திலுள்ள மூலப்  பொருட்களால் மட்டுமே உபோயோகித்து கட்ட வேண்டும்." என்பதே இந்த காந்தியின் சிந்தனை என்னை மிகவும் பாதித்தது. என் வேலையில் தாக்கம் உண்டாக்கியது.

இந்தியா போன்ற ஏழ்மை நிறைந்த நாட்டில் நாம்பொறுப்புடன்நம்இயற்கைவளங்களை காப்பாற்றி கொள்ளவேண்டும்.

நான் மிகச் சாதாரண கட்டிட உழைப்பாளிகள் மூலமே நிறைய யுத்திகளை கற்றுக்கொண்டேன். இந்த அறிவுஎந்தநிபுணரிடம் இருந்தும் கற்றுகொள்ளவில்லை.

குறைந்தசெலவிலான வீடு ஏழைகளுக்கு மட்டுமே என்று நினைப்பது முட்டாள் தனமே. குறைந்த செலவு என்பது தரத்தில் குறைவு என்றோ வசதியில் குறைவு என்றோ அர்த்தமில்லை.



# லாரி பேக்கர்

## கால கட்டம் -

லாரி பேக்கர் இந்திய கட்டிட கலை மேம்பட சிறந்த பங்காற்றினார் . அவரது சொந்த வாழ்க்கை கட்டிட தொழில் இரண்டுக்குமே சரிசமமான முக்கியத்துவம் கொடுத்தார். அந்த அமைதி நிலையின் இருந்ததால் அவருக்கு தரமான கட்டிடங்களை கட்டுவதற்கு முடிந்தது. அவருடைய லட்சியங்களும், தொழில் கூர்மையும், நட்பும் நிறைய நண்பர்களுக்கு முன்னுதாரணமாக இருந்தது. பல இளைஞர்களுக்கும் அவர் வாழ்க்கை முன்னுதாரணமாக அமையும். இன்றைய உலகில் பூமி வெப்பமடைதிலில் இது போன்ற குறைந்த செலவிலான வீடுகள் மிகுந்த அவசியமான ஒன்றாகும்.

1917- பிறப்பு
1938- ராயல் இன்ஸ்டிடியூட் லண்டன்
1981- டாக்டர் பட்டம்- ராயல் இன்ஸ்டிடியூட் நெதர்லாந்து
1987- நேஷனல் வீடுவசதி வாரியம் விருது
1988- இந்திய குடியுரிமை பெற்றார்
1990- பத்மஸ்ரீ விருது
1992- ஹபீட்டாட் ஐக்கிய நாடுகள் விருது
1993- சார் ராபர்ட் மாத்தியூ விருது குறைந்த செலவு வீடுகளுக்காக
1994- வருடத்திற்கான சிறந்த மனிதர்
1995- டாக்டர் பட்டம் லண்டன் பல்கலைக்கழகம்
1998- டாக்டர் ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக்கழகம்
2006- ப்ரிட்ஸ்கர் விருது பரிந்துரைக்கப்பட்டார்
2007- 90 வயதில் காலமானார்

# லாரி பேக்கர்

செங்கற்களை பார்க்கும் போது மனித முகங்களே எனக்கு நினைவூட்டுகிறது. எல்லா கற்களையும் ஒரே செங்கற் சூளையில் சுட்டாலும் ஒவ்வொரு செங்கல்லும் வெவ்வேறு விதமாகவே தோற்றம் அளிக்கிறது. வெவ்வேறு வண்ணங்களாகவும் தோற்றமளிக்கிறது.

இந்த காரணத்தினாலேயே செங்கற்கள் மீது வண்ணம் பூசுவது எனக்கு வெறுப்பை உண்டாகியது. சுண்ணாம்பு பூசுவது என்பது அவசியமே இல்லாத ஒன்று. காசு செலவு கூடுவது மட்டும் அல்லாமல் அது செங்கற்களின் தனித்தன்மையை குலைக்கிறது.



# லாரி பேக்கர்



லாரி பேக்கர் குவாக்கர் இனத்தை சேர்ந்தவர். குவாக்கர் இனம்  மத விரவாதத்தை எதிர்த்தது, மத மூடநம்பிக்கைகளையும் கேள்வி கேட்டது. அவர்கள் சுய ஒழுக்கம், அமைதியின் மீதும் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்களுடைய சித்தாந்தம் காந்தியின் அறவழி சித்தாந்தத்தை ஒட்டியே இருந்தன. 1947ல் குவாக்கர்ஸ் அமைதிக்கான நோபல் விருது பெற்றனர்.

Birmingham School of Architecture

பேக்கர் சிறு வயதிலிருந்தே சிக்கனத்தின் முக்கியத்துவத்தை அறிந்திருந்தார். சிறுவனாக இருக்கும் தனக்கு கிடைக்கும் கைக்காசு கொண்டு ஒரு பிஸ்கேட் வாங்குவது வழக்கம். தன்னிடம் உள்ள காசு கொண்டு இரண்டு மடங்கு உடைந்த பிஸ்கேட்டுகள் வாங்க முடியும் என்பதை தெரிந்து கொண்டார். மேலும் உடைந்த பிஸ்கட்டுகள் எந்த வகையிலும் சுவையில் கம்மியில்லை என்பதை உணர்ந்தார். இது அவருக்கு மறக்கமுடியாத ஒரு பாடமாக இருந்தது.





1960ல் பேக்கர் தன் மனைவியின் சொந்த ஊரான கேரளாவுக்கு வந்தனர், அங்கு திருவனந்தபுரத்தில் குடிபெயர்ந்தனர். தனது ஐம்பதாவது வயதில்தான் முழு நேர கட்டிடக்கலை பணியில் ஈடுபடுகிறார். தன்னை வெறும் கட்டிடம் கட்டி கொடுப்பவராக இல்லாமல் ஒரு கலைஞன் என்றே கருதினார். தனக்கென்று அலுவலகமோ ஒருபணியாளர்களையோ வைத்துகொள்ளவில்லை.
அவர் தான் கட்டும் கட்டிடங்களை பொறியாளர்களை வைத்துக் கட்டுவதில்லை தான் பயிற்சி கொடுத்த கலைஞர்களை கொண்டே கட்டினார். தானே முன்நின்று கட்டுவதால் செலவும் அவரது கட்டுப்பாட்டுக்குள்ளேயே இருந்தது.
அவர் சுற்றுசூழலுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்தார். தனது கட்டிடங்களில் மிக குறைவாகவே சிமெண்ட் உபயோகித்தார்.

சிமெண்ட் என்னை விட வயது குறைவானதே. ஆனால் மக்கள் ஆயிரமாண்டுகளுக்கு மேல் மரபு வீடுகளில் வசித்து வந்துள்ளனர்.

பேக்கர் ஒருமுறை தன்னிடம் வேலை செய்யும் பணியாளரிடம்கடுமையாக நடந்து கொண்டார். வீட்டிற்கு திரும்பிய பின் தன் நடத்தைக்கு மிகவும் வருத்தப்பட்டார். அவருடைய பணியாளருக்கு மன்னிப்பு கடிதம் எழுதினார்.

ஞாயிற்றுக்கிழமைகளில் எங்கள் பெற்றோர்கள் எங்களை விளையாட அனுமதிக்க மாட்டார்கள். என்னுடைய அண்ணன் மிகுந்த சேட்டை செய்யக்கூடியவர். அவர் யாருக்கும் தெரியாமல் நீந்துவதற்கும், டென்னிஸ் விளையாடுவதற்கும் ஓடி விடுவார். எனக்கு அவரின் தைரியம் மிகவும் கவர்ந்தது.அவர் தான் என்னுடைய முன்மாதிரி மனிதர்.நம் வாழ்வில் பிறரிடமிருந்து நல்லவைகளை எடுத்து கொள்ளவேண்டும், கெட்டவைகளை நிராகரிக்க வேண்டும். நான் இதை என் அண்ணனிடம் கற்று கொண்டது.

– லாரி

பேக்கர் வரைந்த கட்டிட வரைப்படங்கள் சாதாரண பணியாளர்கள் கூட எளிதில் புரிந்து கொள்ளும்படியாகவே இருந்தது. கல்யாண அழைப்பிதழ்கள், கடிதங்கள் பின்னாலேயே தான் கட்டும் கட்டிடங்களின் வரைபடங்கள் வரைவார். அவருடைய மலையாள மொழியின் புலமை குறைவாகவே இருந்தது. ஆனால் இந்தி மொழி நன்கு அறிந்திருந்தார். 1988ல் தான் இந்திய குடியுரிமை பெற்றார். இமாலயத்தில் இருக்கும் போது தான் அம்மலை வாழ் மக்கள் வாழும் வீடுகள் அவர்களின் நீண்ட கால தட்ப வெட்ப நிலைமையை மனதில் கொண்டு உருவாக்கப்பட்டவை என்பதை உணர்ந்தார். அங்குள்ள மக்கள் சுற்றியுள்ள கற்களையும், மரங்களையும் உபயோகித்தே கட்டினார்கள். இதையே காந்தியின் தத்துவமாகவும் இருந்தது. அவரும் சுற்றியுள்ள ஐந்து மைல் தூரத்தில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டே கட்ட வேண்டும் என்று கூறினார்.

பேக்கர் காந்தியின் கொள்கையை தன்னால் முடிந்த வரை கடைபற்றினார். கண்ணாடி, இரும்பு போன்றவற்றை தவிர்த்தார். வண்ண வண்ண கலர் பாட்டில்க்களை சுவர்களில் அலங்கரிப்பாக பயன்படுத்துவதில் மிகவும் ஆர்வம் கொண்டிருந்தார். அவர் rat trap bond எனும் நுட்பத்தை பயன்படுத்தி 25% செங்கற்ககள் செலவினை குறைத்தார். அவர் அமைத்த ஜாலி சுவர்கள் குளிர்ந்த காற்றை வெளியிலிருந்து கொண்டு வந்தது மட்டுமில்லாமல்அறையிலுள்ள வெப்பக்காற்றை வெளியே தள்ளியது. இரும்புக்கு பதிலாக மூங்கிலை பயன்படுத்தினார். இது செலவை ஐந்தில் ஒரு பங்காக குறைத்தது.

ஒரு வீட்டை கட்டுவதற்கு முன் நான் வீட்டின் உரிமையாளரை பற்றியான தகவல்களை அறிந்து கொள்வேன். உதாரணத்திற்கு அவர்கள் எங்கு சாப்பிடுவார்கள். உண்ணும் போது குடும்பத்திலுள்ள அனைவரும் சேர்ந்து உக்காருவார்களா அல்லது தனியாக உண்பார்களா. எவ்வாறு அவர்களுடைய உறங்கும் அறை உள்ளது, தைப்பார்களா, புத்தகம் படிப்பார்களா இது போன்ற அவர்களுடைய எல்லா நடவடிக்கைகளை உன்னிப்பாக கவனிப்பேன்.




லாரி பள்ளியில் சிறந்த மாணவர் கிடையாது. ஆனால் வரைவதில் மிகுந்த ஆர்வம் கொண்டவராக இருந்தார். பள்ளி முடிந்தவுடன் அவருடைய நண்பரின் ஆலோசனையின் படி ஒரு கட்டிடக்கலை கல்லூரிக்கு விண்ணப்பித்திருந்தார். பேக்கர் வரைந்த படங்கள் அக்கல்லூரியின் முதல்வருக்கு மிகவும் பிடித்து விட்டதால் அவரை கல்லூரியில் சேர்த்துக் கொண்டார். சிற்பக்கலை, மட்பாண்டம் உருவாக்குதல், களிமண் பொம்மை செய்தல் போன்றவை கற்று கொண்டார். இக்கலைகள் அனைத்தும் அவருக்கு வலிமையான அடிப்படை அறிவை கொடுத்தது.

பேக்கரை டெல்லியில் ஒரு கருத்தரங்கிற்க்காக அழைத்திருந்தனர். அந்த கருத்தரங்கின் தலைப்பு ‘ஏழைகளுக்கான வீடு’ இது ஒரு 5 நட்சத்திர விடுதியில் நடந்தது. பேக்கர் இந்த கருத்தரங்கில் கலந்து கொள்ளமுடியாது என்று நாசுக்காக கூறிவிட்டார். தன்னை ஒரு விமானத்தில் அழைத்துசென்று ஒரு நட்சத்திர விடுதியில் தங்கவைக்கும் செலவில் ஒரு ஏழைக் குடும்பத்திற்கு வீட்டைக் கட்டிவிடலாம் என்றும் கூறிவிட்டார். அதற்க்கு பதிலாக ‘குறைந்த செலவில் வீடுகட்டுவது எப்படி’ என்ற ஒரு படப்புத்தகத்தையும் வெளியிட்ட்டார்.




மரபு கட்டிடங்களை நன்கு படித்தறிந்தார், இவை அனைத்துமே இயற்கையோடு கலந்த ஒன்றாகவே இருந்ததை உணர்ந்தார். இவற்றை மனதில் கொண்டே அவருடைய கட்டிடங்களின் வடிவமைப்பை உருவாக்கினார். எப்படி குறைந்த செலவில் வீடுகள் கட்டுவதை பற்றிய நிறைய புத்தகங்களை எழுதினார். ரப்பிஷ் அண்ட் மட் (rubbish and mud) என்ற புத்தகம் இவர் கையால் வரைந்த படங்களை கொண்டதாகும். சென்டர் போர் டெவெலபிங் ஸ்டடீஸ் (center for developing studies), திருவனந்தபுரம் அருகில் உள்ள காபி ஹவுஸ் (coffee house) ஆகிய இரண்டு கட்டிடங்களும் எளிமையும் அழகியலையும் ஒன்று சேர்ந்த கட்டிடங்களாகும். இவை இரண்டும் மிகவும் பிரசித்தி பெற்றவையாகும். அவருடைய கட்டிடங்கள் கேரளாவின் தேங்காய்மரங்களை விட உயரமாக இருக்க கூடாது என்று கூறுவார். அவருடைய கட்டிடங்கள் ஒவ்வொரு இடத்திற்கு ஏற்றார் போல வேறுபாடு உடையதாகவே இருந்தது. உதாரணத்திற்கு அவர் குஜராத்தில் கட்டிய வீடுகள் கேரளத்தில் கட்டிய வீடுகளிலிருந்து வித்த்தியாசமாகவே இருந்தது.



ஏழை மக்கள் தங்கள் வீடு கட்டுவதை நான் நேரில் பார்த்திருக்கேன், இயற்கையில் கிடைக்கும் பொருட்களை வைத்தே கட்டுகின்றனர். மண், கற்கள், மூங்கில், ஓலை போன்ற இயற்கை பொருட்களை வைத்தே கட்டுகின்றனர்.








Bullock-cart running on Solar Energy

(Cartoon by Laurie Baker)

பேக்கரின் கட்டிடங்கள் மீது பல விமர்சனங்கள் வைக்கப்பட்டன. ஆனால் அவர் ஒரு போதும் அதற்கெல்லாம் பதில் கொடுத்து கொண்டு நேரத்தை வீணாக்கவில்லை. அவருடைய முழு கவனமும் சாதாரண மக்களுக்கு எளிமையாகவும் அதே சமயத்தில் அழகான வீடுகள் கட்டுவதிலேயே இருந்தது.

பேக்கர் ஒரு கட்டிடக்கலை நிபுணராக மட்டுமில்லாமல் மருத்துவம், விவசாயம், ஆம்புலன்ஸ் ஓட்டுதல், தோட்ட வேலை, தச்சன் வேலை, கார்டூன் வரைவது போன்ற எல்லா வேலைகளையும் அவரே செய்தார். அவருடைய வாழ்க்கை முழுமையான்னதாக இருந்தது. பேக்கர் இந்திய குடியுரிமை 1988ல் பெற்றாலும் மகாத்மா காந்தியை சந்தித்த போதே மனதில் இந்தியனாகி விட்டார்.

பேக்கர்தன வாழ்நாளில் பல விருதுகளை பெற்றுள்ளார். பிரிட்டிஷ் அரசாங்கம் ஆர்டர் ஒப் தி பிரிட்டிஷ் எம்பையர் (order of the british empire) விருதைக் கொடுத்தனர். 1990ல் இந்திய அரசாங்கம் பத்மஸ்ரீ விருதைக் கொடுத்து கவுரவித்தனர். பேக்கரும், அவரது மனைவி எலிசபெத்தும் மூன்று குழந்தைகளை தத்தெடுத்து கொண்டார்கள். மகன் திலக், மகள்கள் வித்யா மற்றும் ஹெய்டி ஆவர். பேக்கர் இந்தியாவை நேசித்தார்.

லாரி பேக்கர் தனது 90ம் வயதில் ஏப்ரல் முட்டாள்கள் தினத்தன்று இயற்கை எய்தினார். தனது சாவை கூட ஒரு வேடிக்கை போன்ற தோற்றத்தை அளித்தே மறைந்தார்.

You need half a brick?



பாதி செங்கற்கள் தானே தேவை?
பின் எதற்கு ஒரு முழு செங்கல்லை
உடைக்க வேண்டும். இதனால்
எவ்வளவு காசு, நேரம், உழைப்பு
வீணாகிறது.



சற்று கீழேப் பார் பாதி செங்கற்கள் கொண்டு
வேலை செய்.






இந்த வீடு செங்கற்கள், களிமண் கொண்டே
கட்டப்பட்டது. இந்த வீடு
அடுக்குமாடிகளை கொண்டது. அதனருகில்
இருக்கும் தென்னை மரங்கள் வீடை
குளுமையாக வைத்திருக்கிறது.



இந்த வீடு செங்கற்கள், களிமண்
கொண்டு கட்டப்பட்டது, இது எவ்வளவு
அழகாக இருக்கிறது.

இந்தியாவில் பல கோடி மக்கள் சொந்த வீடு இல்லாமல் இருக்கிறார்கள். கட்டிடகலையில் உள்ளவர்கள் இதை சிந்திக்க வேண்டும். அவர்கள் குறைந்த விலை வீடுகள் காட்டிக்கொடுக்க வேண்டும், அதுவே சாதாரண மக்களின் தேவையாக உள்ளது. இது சாத்தியமே, இதற்கு தேவை மாற்று சிந்தனை. கழிவு நீரை மறுசுழற்சி செய்ய வேண்டும். பெரும்பான்மை மக்களுக்கு குறைந்த பட்ச தேவைகளே பூர்த்தி செய்யபடாமல் இருக்கிறது.

செங்கற்களை கொண்டு சுவர்களை கட்டிவிட்டு சிமெண்டால் முழுக்க பூசுவது போல் ஒரு முட்டாள்த்தனம் வேறு எதுவுமில்லை. ஒரு ஓவியத்தை வரைந்து விட்டு அதன் மேல் சுன்னாம்பு பூசுவதிற்கு சமம். ஒரு கலையை முழுமையாக
புரிந்துக்கொள்வதற்கு அதன் அருகாமையில் சென்று பார்க்க வேண்டும். ஆனால் ஒரு வீடோ கட்டிடமோ அனைவரும் தொலைவிலிருந்தே பார்க்ககூடிய ஒன்றாகவே இருக்கிறது. அதை சாதாரண மனிதர்களும் ரசிக்க கூடிய ஒன்றாக கட்டிக்கொடுப்பது கட்டிடக்கலைஞர்களின் கடமையாகும்.



இந்தியாவில் மரபு கட்டிடங்களில் ஜாலி ( செங்கற்களில் ஆன ஜன்னல்) நிறைந்திருப்பதை நான் பார்த்திருக்கிறேன். அது எனக்குள் தாக்கத்தை உருவாக்கியது. என்னுடைய எல்லா கட்டிடங்களிலும் அதை நீங்கள் காண்பீர்கள். செங்கற்களினால் ஆன ஜாலி குளிர்ந்த காற்றை வெளியிலிருந்து கொண்டு வரும், சூடு காற்றை வெளியில் தள்ளும். கதவுகளிலும் , ஜன்னல்களிலும், கண்ணாடி பதிப்பதைக் காட்டிலும் அரை வட்ட வளைவுகளை செங்கற்களில் உண்டாக்கினால் அது குளிர்ந்த காற்றை வீட்டின் உள்ளே தள்ளும். வளைவுகள் உறுதியானவை மட்டுமல்லாமல் அழகானவையும் கூட. எனக்கு அறவே பிடிக்காதது கண்ணாடி பிரேம்கள் கதவிலும், ஜன்னல்களிலும் உபயோகிப்பது தான். என்னுடைய நிறைய கட்டிடங்களில் அதை தவிர்த்திருக்கிறேன்.

இந்தியாவில் கோடிக்கணக்கான மக்களுக்கு அத்தியாவசமான தேவைகளே கிடைக்காமல் உள்ளது என்பதே உண்மை. தங்க வீடுகள் இல்லை, கதவுகள், ஜன்னல்கள் இல்லை. இரண்டு குடும்பங்கள் ஒரே வீட்டை பகிர்ந்து வாழ்வதை எங்கும் காணலாம். அவர்களுடைய குழந்தைகள் அமைதியாக படிப்பதற்கு ஒரு இடம் இல்லை என்பதே நிதர்சனம். பல அடுக்குமாடிகள், குளூருடப்பட்ட மால்கள், சினிமா தியேட்டர்கள், பெரிய மேம்பாலங்கள் இவையகளே கட்டப்படுகின்றன ஆனால் எளிய மக்களின் எளிய தேவைகள் முற்றுமாக நிராகரிக்கப்படுகின்றன. இது முற்றிலும் மாற வேண்டும். ஒருவருடைய வீடும் அதன் சுற்று சூழலும் அவருடைய திறன் மேம்பட இன்றியமையாததாகும்.



என்னுடைய 80 ஆண்டு வாழ்வில் வன்முறையே மனிதனின் அழிவிற்கு காரணம். மதவெறி, ஜாதிவெறி, போன்ற வன்முறைகள் இருக்கும் வரை எளிய மக்களின் அடிப்படை பிரச்சினைகளை தீர்க்கவே முடியாது. அன்பும் சகோதிரத்துவமும் இருந்தால் எல்லா பிரச்சினைகளையும் தீர்க்க முடியும். அனைவரிடமும் அன்பாக இருப்பதே உண்மையான மதமாகும்.

லாரி பேக்கர் யாரிடமும் தான் செய்யும் வேலைக்கு பெரிதாக பணம் வாங்கி கொண்டதில்லை. அவருடைய பணியாளர்களுக்கு கூலி கொடுப்பதற்கே அதை அவர் வாங்குவர். இரண்டு அல்லது மூன்று கட்டிடங்களை ஒரே சமயத்தில் கட்டி கொண்டிருப்பதால் அவருக்கான தேவைகளை பூர்த்தி செய்வதற்கான காசு மட்டுமே இருக்கும். பிரிட்டிஷ் காலனி இந்தியாவில் இருந்து எவ்வளவோ கொள்ளை அடித்திருக்கிறார்கள். அதை திருப்பி கொடுப்பது தன்னால் முடியாது அதனால் தான் எந்த காசையும் வாங்க கூடாது என்று கூறுவார் .

ஒரு வீடு கட்டுவதற்கு முன் அந்த நிலத்தின் உயரமான பகுதி எது, தாழ்வான பகுதி எது என்பதை நான் கண்டு கொள்வேன். எங்கே மரங்கள் இருக்கின்றன, செல்ல பிராணிகள் இருக்கின்றன, எத்திசையில் காற்று அடிக்கிறது போன்றவை மனதில் கொண்டே வீட்டின் வடிவத்தை உருவாக்குவேன். நான் எப்போதும் அங்கு வாழப்போகும் மனிதர்களையே மனதில் வைத்து வேலை செய்வேன்.





1990ல் இந்திய
அரசாங்கம் பத்மஸ்ரீ
விருதை அளித்து லாரி
பேக்கரை கவுரவித்தது.




6 Every building should be UNIQUE. No two people, or families etc are alike, so why should their houses all be the same?

10 DONT ROB NATIONAL RESOURCES & do not use them ~~extravagantly~~ or ~~unnecessarily~~.

11 Be HONEST & TRUTHFUL in design & material usage, construction, costs, & about your own mistakes!

12 AVOID OPULANCE & 'SHOWING-OFF', and dont use currently fashionable gimmicks.

13 Get your CONSCIENCE out of deep-freeze & USE it. Let ALL YOU DO be honest & Truthful - not only yr buildings.

14 Look closely at YOUR OWN PREJUDICES. Question them and see if they are still justifiable!

15 HAVE FAITH IN YOUR OWN CONVICTIONS & have courage to stick to them — but respect those of other people.

16 Make COST-EFFICIENCY your WAY OF LIFE - not merely "Low Cost for the Poor". Practice what you preach.

20 TRIM your drawings, staff, equipment, travel & transport, paper, & expenses.

(MY FEELINGS ABOUT BEING AN ARCHITECT!) Laurie Baker

